THE HON. SRI C. SUBRAMANIAM : (a) The scheme of opening diversified courses in Secondary schools has been in vogue from 1948–49.

(b) A statement [a] is laid on the table of the House.

SRI A. VEDARATHNAM : இதுவரையில் இந்த முறையில் நடத்தப் படும் பள்ளிகள் திருப்திகரமாக வேலை செய்திருக்கின்றனவா ? இது சம்பந்தமாக அரசாங்கத்தின் அபிப்பிராயம் என்ன ? திருப்திகரமாக இருந்திருந்தால், மற்றப் பள்ளிகளையும் பல நோக்கப்பள்ளிகளாக மாற்ற அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இவைகளை பல நோக்கப் பள்ளிகளாக மாற்றியதில் நல்ல பலன்கள் ஏற்பட்டிருக்கின்றன என்று சர்க்கார் கருதுகிறது. அடுத்த ஆண்டில் அவசியமான பணத்தை ஒதுக்கி எத்தனை பள்ளிகளை பல நோக்கப் பள்ளிகளாக மாற்றமுடியுமோ அத்தனை பள்ளிகளை பல நோக்கப் பள்ளிகளாக மாற்றுவதற்கு ஏற்பாடு செய்துகொண்டிருக்கிறோம்.

*Number of Doctors in the State*

10 a.m. *428 Q.—SRI N. R. THIAGARAJAN : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) தற்போதைய சென்னை ராஜ்யத்தில் எத்தனை டாக்டர்கள் இருக்கிறார்கள் (ஜில்லாவாரியாக) ?

(ஆ) அவர்களில் எம். பி. பி. எஸ். எத்தனை பேர் ? எல். எம். அண்டு எஸ்., எல். எம். பி. எத்தனை பேர் (ஜில்லாவாரியாக) ?

(இ) சர்க்கார் சர்வீஸிலுள்ளவர்கள் எத்தனை பேர் (ஜில்லா வாரியாக ?

(ஈ) சொந்தத்தில் தொழில் நடத்துபவர்கள் எத்தனை பேர் (ஜில்லா வாரியாக) ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) to (d) A statement [b] is placed on the table of the House.

SRI N. R. THIAGARAJAN : இதில் பிரைவேட் பிராக்டிஸ் செய்யும் டாக்டர்களின் பெயர்கள் காணவில்லை. கிட்டத்தட்ட பதினாயிரம் டாக்டர்கள் அப்படி இருக்கவேண்டுமென்று தெரிகிறது. ஆகவே எல்லா டாக்டர்களின் பட்டியலையும் தயாரித்து டி.எம்.ஓ. கையில் அது இருப்பதுதான் நல்லது. ஆயிரம் பேர்களைக் கொன்றவன் அரை வைத்தியன் என்று சொல்வது போல், பல கம்பவுண்டர்கள் டாக்டர் என்று போர்டு போட்டுக் கொண்டு வைத்தியம் செய்து வருகிறார்கள். ஆகவே நான் குறிப்பிட்டது போன்று ஒரு பட்டியல், டாக்டர்களின் பட்டியலில் தயாரித்து வைக்கப்படுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கம்பவுண்டர்கள் டாக்டர் என்று போர்ட் போட்டுக் கொண்டிருப்பதாக அங்கத்தினர் அவர்கள் சொன்னார்கள். அப்படி போர்ட் போட்டுக் கொண்டிருக்கிற இரண்டு நபர்களைச் சொன்னால் போதும், நடவடிக்கைகள் எடுக்கலாம்.

(கனம் அங்கத்தினர் இன்னொரு கேள்வி கேட்க எழுந்தார்.)

MR. SPEAKER : இப்பொழுது ஒரு உப கேள்விக்குத்தான் சந்தர்ப்பம் கிடைக்கும். இல்லை கேள்வியை நாளைக்கு எடுத்துக் கொள்ளலாம் என்று அங்கத்தினர் சொன்னால் நாளை எடுத்துக்கொள்ளலாம்.

*Local Fund Hospital at Peralam*

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் இடத்தில் இல்லாததால், 429-வது கேள்வியும் அதன் பதிலும் சட்டசபை நடவடிக்கைகளில் அச்சிடப்படும்.

---

[a] Printed as Appendix III on pages 164–172 infra.
[b] Printed as Appendix IV on page 172–173 infra.